[8th April 1958

SRI S. LAZAR : சார், சமீபத்தில் 25 சதவிகிதம், 50 சதவிகிதம் என்று 'கட்' போடப்பட்டிருக்கிறது. நிரந்தரமான ஒரு நிலைமை இன்னும் குறைந்த பட்சம் எவ்வளவு நாட்களில் ஏற்படும்.

THE HON. SRI V. RAMIAH : நிரந்தரமான நிலைமை இரண்டாவது ஐந்தாண்டு திட்ட முடிவுக்குள் ஏற்பட்டு விடும். இன்னும் சில மாதங்களில் இப்போது இருக்கக்கூடிய கஷ்டம் போய்விடும் என்பதுதான் என்னுடைய நம்பிக்கை.

* 640 *Q.*—SRI A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) the basis on which power-cut has been imposed this year; and

(*b*) how long the cut will be continued?

THE HON. SRI M. A. MANICKAVELU (on behalf of the Hon. Sri V. Ramiah) : (*a*) The power-cut imposed is based on the demand for power in the Hydro-areas in relation to the quantum of power generated in the Hydro-electric power stations in the State, which in turn is dependent on the water storages available in the Hydel Reservoirs.

(*b*) Till about the end of June 1958, when with the onset of the South-west monsoon, the storages in the Hydel Reservoirs in the State, may normally be expected to be augmented.

SRI A. VEDARATHNAM : நதி உற்பத்தி ஸ்தானங்களில் இந்த வருஷம் அதிக மழை பெய்திருந்தும், 'பவர் கட்' ஏன் வரவேண்டும்? பவர் உற்பத்தியை அதிகரிக்காமல் வினியோகத்தை அதிகரித்துக் கொண்டு போவதற்குக் காரணம் என்ன?

THE HON. SRI V. RAMIAH : மின்சார திட்ட பகுதிகளில் உள்ள அத்தனை தேக்கங்களிலும் போதுமான மழை இல்லை. முக்கியமாக பைகாரா பகுதியில் அதிக மழை இல்லாத காரணத்தினால் இந்த நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. மின்சார வினியோகத்தை அதிகப்படுத்திக் கொண்டு போவதினால் அதிகமான பாதகம் ஏற்படாது என்பது நம்முடைய நம்பிக்கை. திட்டங்கள் எல்லாம் முடிவடையும் தருவாயில் இருக்கின்றன. ஆகையால் இந்த நெருக்கடி தீர்ந்து விடும்.

SRI K. VINAYAKAM : Sir, when we are not in a position to maintain the existing services by giving cent per cent of their energy wanted in the concerns, what useful and utilitarian purpose will be served by electrifying more villages which will be also subsequently starved due to these cuts?

THE HON. SRI V. RAMIAH : Sir, my hon. collegue remarked that villages are starved. The villages are not starved. Neither are those who consume electricity are starved. We are going with an expansion scheme—both on the expansion of the available electricity and on the generation of electric power. We expected our Periyar scheme to come in time, to meet the expanded development of power. But due to some defects, it was held up for a few months. But, if there is any strain, it is due to that and that will be over in course of time.

8th April 1958]

**SRI S. PAKKIRISAMI PILLAI :** மழைத் தண்ணீர் வராத காரணத்தினால் ‘ ஹைட்ரோ பவர் ஸ்டேஷன் ஏரியா’க்களில் கட்டுப்பாட்டுக்கு ஏற்பாடு செய்திருப்பதாக கனம் மந்திரி அவர்கள் சொன்னார்கள். ‘ தெர்மல் பவர் ஸ்டேஷன்களில் ’ இம்மாதிரி கட்டுப்பாடு இருக்கவேண்டிய காரணம் என்ன? ‘ஸ்டாக்கரிங் பீரியட்ஸ்’ என்று போடுவதற்கு காரணம் என்னவென்று சொல்லமுடியுமா?

**THE HON. SRI V. RAMIAH :** ‘தெர்மல் ஸ்டேஷன்களில்’ இப்போது கட்டுப்பாடு இல்லை. ஆனால் ‘ஸ்டாக்கரிங்’ முறை தொடர்ந்து இருந்து கொண்டுதான் இருக்கிறது. பேஸின் பிரிட்ஜ் பவர் ஸ்டேஷனில் இன்னும் சில வாரங்களில் அதிகப்படியான மின்சாரம் உற்பத்தியாகும். அப்போது இந்த ‘ஸ்டாக்கரிங்’ முறையை திருத்தி அமைப்பதற்கு யோசனை செய்யப்படும்.

**SRI M. R. KANDASWAMI MUDALIYAR :** குடிசைத் தொழிலாக இருக்கும் ‘பவர் லூம்ஸ்களுக்கு’ இதிலிருந்து விதி விலக்கு அளிக்க ஏற்பாடு செய்யப்படுமா?

**THE HON. SRI V. RAMAIAH :** அதற்கு தனி கேள்வி வேண்டும்.

*Sreepadam lands*

* 641 *Q.*—**SRI N. K. PALANISAMI :** Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government have received any communication from the Kerala State regarding the introduction of legislation conferring permanent rights on tenants of Sreepadam lands transferred to this State after States Reorganization making them pay land revenue only; and

(*b*) if so, the steps taken by the Government thereon?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

(*b*) The Government have consulted the Board of Revenue and the Board's reply is awaited.

**SRI N. K. PALANISAMI :** என்ன காரணத்தினால் இம்மாதிரி தாமதம் ஏற்படுகிறது என்று கனம் மந்திரி அவர்கள் சொல்வார்களா ?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** இதில் தாமதம் ஒன்றும் ஆகவில்லை. இந்த விஷயம் பரிசீலனையில் இருந்து கொண்டிருக்கிறது.

**SRI S. LAZAR :** ஸ்ரீ பாத நிலங்கள் என்றால் என்ன என்று தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறேன்.

MR. SPEAKER : The hon. Member may put a separate question.

SRI T. T. DANIEL : Sir, in view of the fact that these Sripadam lands belong to the ex-Rajapramuk of the erstwhile Travancore-Cochin State, may I know from the Hon. Minister whether his opinion has been got by the Kerala Government as to whether he is prepared to surrender all these Sripadam lands in favour of the cultivators?

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, the hon. Member has given the meaning of the word ‘ Sripadam ’’.

As regards the other question, I want notice.